ஸ்ரீ காமகோடி க்ரந்தாவளி:

உ

ஸ்ரீமதப்பய்ய தீக்ஷிதரவர்கள் அருளிச்செய்த

# ஆதி³த்ய ஸ்தோத்ர ரத்னம்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளான ஜகத்குரு

**ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்**

அருளிய திவ்ய ஸ்ரீமுகத்துடனும்

மாயவரம், ஸாமவேத ச்ரௌத ஸ்மார்த்த லக்ஷண
வித்வான் வேதாந்த சிரோமணி தர்மஜ்ஞ

**ம. ராமனுத தீக்ஷிதர்**

எழுதிய தமிழ் உரையுடனும்



**ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்**

4. பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை -1.



**ஶ்ரீ ஜகத்குரு காஞ்சீ காமகோடி பீடாதிபதிகள்**
**ஶ்ரீ சந்தர சேகரேந்த்ர ஸரஸ்வதீ**
ஶ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

श्रीः



श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य श्रीमच्छंकरभगवत्पाद प्रतिष्ठित श्रीकाञ्चीकामकोटि पीठाधिपतिजगद्गुरूणां आचार्यपादानां नारायण स्मरणपूर्विकेयमाज्ञा निव्रेद्यते।

शिवतत्त्वविवेक - शिवार्कमणिदीपिका दिशताधिकग्रन्थकर्तॄणां शिव भक्तधुरंधराणां श्रीमदप्पय्यदीक्षितेन्द्राणां कृतिषु आदित्यस्तोत्ररत्ननामकं स्तोत्ररत्नमुत्कर्षेण राजते।

अस्मिन् स्तोत्रे, स्वेनैव रचितायां रत्नप्रकाशिकाख्यायां वृत्तौ च श्री दीक्षितेन्द्रैः भगवत्सूर्यसंबधीनि मण्डल- रथ - चक्र - अश्वादितत्त्वानि, तदु पासकदेवादि विशेषाः, तत्किरणैः लोकशुद्धिप्रकाराः, तन्मण्डलान्तर्या मिणः परमेश्वरस्य महिमा, तदुपासनेन जाययानानि फलानि इत्यादयो विषयाः श्रुतिस्मृतिपुराणादि प्रमाणोपष्टम्भेन प्रकटीकृताः।

एतादृशस्तुतितल्लजं गैर्वाणवाणी परिचितिरहितानां द्राविडीज्ञानां सुलभबोधाय मायूरक्षेत्रामिजन धर्मज्ञ श्रीरामनाथदीक्षितविरचितेन श्रीदी क्षितेन्द्र वृत्त्यनुसारिणा द्राविड्यनुवादेन सनाधीकृतं श्रीकामकोटि कोशस्थानाधिकारिभिः मुद्रापितमवलोक्य सन्तुष्यामः।

आस्तिकाः एतत्स्तोत्रमणे : पठनश्रवणादिना सवितृमण्डलमध्य बर्तिनमीश्वरं सेवमानाः तत्कृपया आरोग्यादि निखिलभाग्यावहा भवन्तु

विजययात्रास्थानम्
आरणि
विकारि फाल्गुनशुद्ध चतुर्दशी

नारायणस्मृतिः

## பொருளடக்கம்

## ॥ श्री शिवाभ्यां नमः ॥

॥ ஶ்ரீ ஶிவாப்⁴யாம் நம꞉ ॥

## முகவுரை

ஆதித்ய ஸ்தோத்ர ரத்னம் என்பது ஶ்ரீமதப்பய்ய தீக்ஷிதரவர்கள் இயற்றியது. ஶ்ரீமான் அப்பய்ய தீக்ஷிதரவர்கள் ஶ்ரீ பரமசிவனின் அவதாரமென்று சிவ ரஹஸ்யம் முதலிய நூல்கள் கூறுகின்றன. ஆசார்ய பகவத்பாதாள் ஸ்தாபித்த ஆறு மதங்களில் சைவ மதத்தைத் தழுவி சிவார்க்கமணி தீபிகை முதலிய பல நூல்களை இயற்றியுள் ளார். பரிமளம், நியாய ரக்ஷாமணி முதலிய பல நூல்களை இயற்றி அத்வைத மதத்தை நிலைநாட்டியுள்ளார். சிறிய ஸ்தோத்ரம் முதல் பெரிய ஶாஸ்திர க்ரந்தங் கள் வரை 104 க்ரந்தங்களை பாமரர் முதல் பண்டிதர் வரை ரஸிக்குமாறு இயற்றியு ள்ளார்.

அதில் இந்த ஆதித்ய ஸ்தோத்ர ரத்னம் என்பது ஸூர்ய பகவானைப்பற்றி யுள்ளது. இதில் வேதங்களிலும் ஸ்ம்ருதிகளிலும், இதிஹாஸ புராணங்களிலும் ஸூர்ய பகவானைப்பற்றி வர்ணித்திருக்கும் விசேஷங்களை 12 சுலோகங்களில் சுருக்கமாகவும், எளியதாகவும் கூறுகிறுர். இந்த ஸ்தோத்ரத்தைப் படிப்பவர்கள் ஸூர்யனைப்பற்றிய விசேஷங்கள் அனைத்தையும் அறிந்துகொள்ள முடியும். ஸூர்ய பகவானைப்பற்றிய விவரங்களை ஒவ்வொருவரும் தெரிந்துகொள்ள வேண்டியது அவச்யம். ஸூர்யன் ப்ரத்யக்ஷமான தெய்வம். மற்ற தெய்வங்களை நிரூபிப்பது கடினமான முறை. ஸூர்யனை நிரூபிப்பது வெகு ஸுலபம்,

### उतेनं गोपाः अदृशन् अहशन् उदहार्यः

**உதேனம் கோ³பா꞉ அத்³ருஶன் அஹஶன் உத³ஹார்ய꞉**

என்று இடையர்கள், ஜலம் எடுக்கும் ஸ்த்ரீகள் இவர்கள்கூட, நன்கு காணுகிறுர்கள் என்று வேதம் கூறுகிறது.

இந்துக்களல்லாதவர்கள்கூட காலையில் கிழக்கே பார்த்துக்கொண்டு ஸூர்யனை வணங்குகிறுர்கள். அயல்தேசங்களில் உள்ளவர்களும் ஸூர்யனைப்பற்றிக் கொண்டாடுகிறுர்கள்.

இவ்விதம் எல்லோராலும் தெய்வமாக ஒப்புக் கொள்ளப்பட்ட ஸூர்யனைப் பற்றி வேத ஶாஸ்த்ரங்கள் என்ன கூறுகின்றன என்பதை நாம் அறியவேண்டாமா? அவ்விதம் அறிவது ஸாதாரண ஜனங்களுக்கு ஸுலபமல்ல. இந்த ஸ்தோத்ரத்தைப் படித்தால் எளிதில் தெரிந்து கொள்ளலாமென்பது படிப்பவர்களுக்கு நன்கு விளங்கும்.

மஹா பாரதத்தில் பாண்டவர்கள் காட்டில் வாஸம் செய்யும்பொழுது ரிஷிகள், பட்டணத்து ஜனங்கள் பலர் தர்மபுத்ரருடன்கூட இருக்கிறுர்கள். தன்னை

அண்டிய இந்த ஜனங்களுக்கு ஆஹாரம் அளிக்கவேண்டிய பொறுப்பு தர்மபுத்ரருக்கு ஏற்படுகி றது. அப்பொழுது ஸூர்ய பகவானை துதித்து அவரிடமிருந்து அக்ஷய பாத்ரத்தைப் பெறுகிறார். அந்த பாத்ரம் எவ்வளவு பேர்களானாலும் அவர்களுக்கு ஆஹாரமளிக்கின் றது. இவ்விதம் ஸூர்யனுடைய மஹிமை வர்ணிக்கப்படுகிறது.

ஸ்ரீமத் ராமாயணத்திலும் இராவணனுடன் யுத்தம் செய்து சோர்வடைந்திருக் கும் ஸமயத்தில் இராமபிரானுக்கு அகஸ்த்ய மஹர்ஷி ஸூர்ய பகவானின் அருள் உண்டாவதற்காக,

**ततो युद्धपरिश्रान्तं समरे चिन्तया स्थितम् ।**
**रावणं चाग्रतो दृष्ट्वा युद्धाय समुपस्थितम् ॥**

**ததோ யுத்³த⁴பரிஸ்ராந்தம் ஸமரே சிந்தயா ஸ்தி²தம் ।**
**ராவணம் சாக்³ரதோ த்³ருஷ்ட்வா யுத்³தா⁴ய ஸமுபஸ்தி²தம் ॥ 1 ॥**

என்றாரம்பித்து ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்ரத்தை உபதேசிக்கின்றார்.

ஸ்ரீமத் பாகவதத்திலும் ஸத்ராஜித் என்பவர் ஸூர்ய பகவானை உபாஸித்து ஸ்யமந்தகம் என்ற மணியைப்பெற்றார். அதன் பெருமை தினம் 8 பாரம் தங்கத்தை விளைவிக்குமென்றும், துர்ப்பிக்ஷம் முதலியது ஏற்படாதென்றும் ப்ரஸித்தி பெற்றது.

மற்றும் பல புராணங்களில் ஸூர்ய பகவானைப்பற்றிய விசேஷங்கள் பலவா றாகக் கூறப்படுகின்றன.

ஸ்கந்த புராணத்தில்,

**आरोग्यं भास्करादिच्छेत् ஆரோக்³யம் பா⁴ஸ்கராதி³ச்சே²த்**

என்று ஸூர்யன் அருள் இருந்தால் வ்யாதிகள் அணுகா என்று கூறப்படுகிறது.

உபநிஷத்துக்களில் ஸூர்யனை ப்ரஹ்மமாக உபாஸனம் செய்யும்படியும் அவரே நற்கதியை அடைவிக்கின்றாரென்றும் சொல்லப்படுகிறது. இவ்விதம் வர்ணிக்கப்படுகிற ஸூர்ய பகவானின் இரதம் முதல் ஶ்லோகத்தில் 10,000 யோஜனை யுள்ள தென்றும், ஒரு சக்ரம், ஏழு சந்தஸ்ஸுக்களாகிய குதிரைகள் உள்ள தென்றும், மஹாமேரு பர்வதத்தைச் சுற்றிவருகிறதென்றும் கூறப்படுகிறது.

இரண்டாவது ஶ்லோகத்தில் ஸூர்ய மண்டலத்தில் உள்ள ஆதித்யன் முதலிய 7 தேவர்கள் ஒவ்வொரு மாதத்திலும் ஸூர்ய பகவானை உபாஸிக்கின்றார் கள் என்று கூறப்படுகின்றது. மூன்றாவது ஸ்லோகத்தில் ஸூர்ய கிரணங்கள் ப்ராணிகளின் சரீரத்தில் நாடிகள் வழியாகப் ப்ரவேசித்து ஹ்ருதயத்தை வ்யாபித் திருக்கின்றன என்றும், கிரணங்கள் மூலம் பெருகும் அமிருதத்தை தேவர்கள்,

பித்ருக்கள், மனிதர்கள் பருகுகிறுர்களென்றும், வெப்பம், மழை, பனி இவைகளைக் கொடுத்து ப்ராணிகளைக் காப்பாற்றுகின்றன வென்றும் கூறப்படுகின்றது.

நான்காவது ஶ்லோகத்தில் மேரு பர்வதத்தைச் சுற்றி வரும் ஸூர்யன் தான் ஓரிடத்தில் இருந்துகொண்டு கிரணங்களால் ஐந்து திசைகளை வியாபிக்கின்றுர் என்றும் நக்ஷத்திரங்கள், க்ரஹங்கள் இவைகளுக்கு ப்ரகாஶத்தைக் கொடுக்கின்றுரெ ன்றும், ப்ரளய காலத்தில் ஏழு உருவத்துடன் உலகத்தை எரிக்கின்றுரென்றும் கூறப்படுகின்றது.

ஐந்தாவது ஶ்லோகம் 12 மாதங்களிலும், 12 பெயருடன் இருந்துகொண்டு தன் கிரணங்களால் உலகத்தை சுத்தி செய்கிறுரென்றும், அவ்விதம் சுத்திசெய்யாத மாதத்தில் (மலமாதம்) நற்காரியங்கள் செய்யக்கூடாதென்றும் கூறுகிறது.

ஆறு முதல் நான்கு ஶ்லோகங்களால் ஸூர்ய மண்டலத்தில் வஸிக்கும் ஸூர்ய பகவானை வேதங்கள், த்வாதஶாதித்யர்கள், கந்தர்வர்கள் முதலியவர்கள் உபாஸிக்கின்றனர் என்றும், வ்யாஹ்ருதிகளால் ப்ரஹ்ம ரூபமாக உபாஸிக்கத் தகுந்தவரென்றும் கூறப்படுகின்றது.

பிறகு மூன்று ஶ்லோகங்களால் ஆதித்யாந்தர்யாமியான பரமேஶ்வரனுடைய மஹிமை கூறப்படுகின்றது. யாகங்களின் பயன் மிகுந்ததாக ஆவதற்கு உத்கீத பக்தியிலுள்ள ஓங்காரத்தில் அவரை உபாஸிக்கவேண்டுமென்றும், ப்ராஜாபத்ய க்ருச்ச்ரம் அனுஷ்டிக்கும் புருஷன் அவரை உபாஸிக்கும் முறையையும் கூறி, எல்லோருக்கும் ப்ரத்யக்ஷ தெய்வமென்றும், காயத்ரீ மந்த்ரத்திற்குப் பொருளாக விளங்குகிறுரென்றும் வர்ணிக்கப்படுகின்றது.

13, 14 ச்லோகங்களில் கீழ்ச்சொல்லிய விஷயங்களைச் சுருக்கமாகச் சொல்லி இந்த ஸ்தோத்ரத்தைப் படிப்பவர்களுக்குப் பயனும் கூறப்படுகின்றது.

இவ்விதம் இந்த ஸ்தோத்ரத்தில் ஸூர்ய பகவானைப் பற்றிய விவரங்களும், இதைப் பாராயணம் செய்பவர்களுக்கு துஸ்ஸ்வப்நம், பயங்கர வ்யாதிகள், நவக்ரஹ தஶா புக்தி தோஷங்கள் விலகுகின்றனவென்றும் கூறப்பட்டுள்ளது. மற்றும் ஆதித்ய ஸ்தோத்ரம், ஆதித்ய கவசம். ஆதித்ய ஹ்ருதயம், ஸங்க்ராந்தி பூஜை, ஸூர்யா ஷ்டோத்தர ஶதாநாமாவளி, ஸ்த்ரீகள் செய்யும் ஸூர்ய நமஸ்கார பூஜை முதலிய தும் இதில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

இந்த அறிய க்ரந்தத்தைக் கொடுத்தும் இதை மொழி பெயற்கும் புத்தி சக்தி யை அளித்தும் அனுக்ரஹித்த எனது ப்ரஹ்மவித்யாசார்யாளான போலகம் சாஸ்த்ர ரத்ஞகர **P.S. ஸ்ரீராம சாஸ்திரிகள்** அவர்களுக்கு நமஸ்கார பூர்வகமரக நன்றியை பலமுறை தெரிவிக்கிறேன்.

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான ஸ்ரீ மதாசார்யாளின் ஆஜ்ஞையின் பேரில் எழுதப்பட்ட இந்த ஸ்தோத்ரத்தை எல்லாரும் பாராயணம் செய்து க்ருதார்த்த ர்களாக ஆகவேண்டுமாக ப்ரார்த்திக்கின்றேன்.

மாயூரம் M. **ராமஞுத தீக்ஷிதர்**.

# நவக்ரஹங்கள்



ஸூர்யன்



சந்த்ரன்



குஜன் (செவ்வாய்)



புதன்



குரு (வியாழன்)



சுக்ரன் (வெள்ளி)



சனி



ராகு



கேது

श्रीः

# ॥ सूर्य कवचम् ॥

अस्य श्री सूर्यकवच महामन्त्रस्य - अगस्त्यो भगवान् ऋषिः - अनुष्टुप् छन्दः सूर्यो देवता - श्रीं बीजं - णीं शक्तिः - सूं कीलकम् – सूर्य - प्रसादसिद्ध्यर्थे जपे विनियोगः ।

ஶ்ரீ:

# ॥ ஸூர்ய கவசம் ॥

அஸ்ய ஶ்ரீ ஸூர்யகவச மஹாமந்த்ரஸ்ய - அக³ஸ்த்யோ ப⁴க³வான் ருஷிः - அனுஷ்டுப் ச²ந்த³ः ஸூர்யோ தே³வதா - ஶ்ரீம் பீ³ஜம் - ணீம் ஶக்திः - ஸூம் கீலகம் - ஸூர்ய - ப்ரஸாத³ஸித்³த்⁴யர்தே² ஜபே விநியோக³ः ।

## ॥ ध्यानम् ॥

## ॥ த்⁴யானம் ॥

जपाकुसुमसंकाशं द्विभुजं पद्महस्तकम् ।
सिन्दूराम्बरमाल्यं च रक्तगन्धानुलेपनम् ॥

ஜபாகுஸுமஸங்காஶம் த்³விபு⁴ஜம் பத்³மஹஸ்தகம் ।
ஸிந்தூ³ராம்ப³ரமால்யம் ச ரக்தக³ந்தா⁴னுலேபனம் ॥

माणिक्यरत्नखचितं सर्वाभरणभूषितम् ।
सप्ताश्वरथवाहं तु मेरुं चैव प्रदक्षिणम् ॥

மாணிக்யரத்நக²சிதம் ஸர்வாப⁴ரணபூ⁴ஷிதம் ।
ஸப்தாஶ்வரத²வாஹம் து மேரும் சைவ ப்ரத³க்ஷிணம் ॥

'कुर्वाणं 'इति शेषः-

'குர்வாணம் 'இதி ஶேஷः-

देवासुरवरैर्वन्धं घृणिभिः परिवेष्टितम् ।
ध्यायेत् पठत् सुवर्णाभं सूर्यस्य कवचं मुदा ॥

தே³வாஸுரவரைர்வந்த⁴ம் க்⁴ருணிபி⁴ः பரிவேஷ்டிதம் ।
த்⁴யாயேத் பட²த் ஸுவர்ணாப⁴ம் ஸூர்யஸ்ய கவசம் முதா³ ॥

## ॥ अथ कवचम् ॥

### ॥ அத² கவசம் ॥

घृणिः पातु शिरोदेशं सूर्यः पातु ललाटकम् ।
आदित्यो लोचने पातु श्रुतिं पातु दिवाकरः ॥
க்⁴ருணிः பாது ஶிரோதே³ஶம் ஸூர்யः பாது லலாடகம் ।
ஆதி³த்யோ லோசனே பாது ஶ்ருதிம் பாது தி³வாகரः ॥

घ्राणं पातु सदा भानुः मुखं पातु सदा रविः ।
जिह्वां पातु जगन्नेत्रः कण्ठं पातु विभावसुः ॥
க்⁴ராணம் பாது ஸதா³ பா⁴னुः முக²ம் பாது ஸதா³ ரவிः ।
ஜிஹ்வாம் பாது ஜக³ந்நேத்ரः கண்ட²ம் பாது விபா⁴வஸுः ॥

स्कन्धौ ग्रहपतिः पातु भुजौ पातु प्रभाकरः ।
करावब्जकरः पातु हृदयं पातु भानुमान् ॥
ஸ்கந்தௌ⁴ க்³ரஹபதிः பாது பு⁴ஜௌ பாது ப்ரபா⁴கரः ।
கராவப்³ஜகரः பாது ஹ்ருத³யம் பாது பா⁴னுமான் ॥

मध्यं पातु सुसप्ताश्वो नाभिं पातु नभोमणिः ।
द्वादशात्मा कटिं पातु सविता पातु सक्थिनी ॥
மத்⁴யம் பாது ஸுஸப்தாஶ்வோ நாபி⁴ம் பாது நபோ⁴மணிः ।
த்³வாத³ஶாத்மா கடிம் பாது ஸவிதா பாது ஸக்தி²னீ ॥

ऊरू पातु सुरश्रेष्ठो जानुनी पातु भास्करः ।
जङ्घे मे पातु मार्ताण्डो गुल्फौ पातु त्विषां पतिः ॥
ஊரூ பாது ஸுரஶ்ரேஷ்டோ² ஜானுனீ பாது பா⁴ஸ்கரः ।
ஜங்கே⁴ மே பாது மார்தாண்டோ³ கு³ல்பௌ² பாது த்விஷாம் பதிः ॥

पादौ दिनमणिः पातु पातु मित्रोऽखिलं वपुः ।
பாதௌ³ தி³னமணிः பாது பாது மித்ரோ(அ)கி²லம் வபுः ।

## ॥ फलश्रुतिः ॥

आदित्यकवचं पुण्यं अभेद्यं वज्रसन्निभम् ।
संवत्सरमुपासित्वा साम्राज्यपदवीं लभेत् ।
सर्वरोगभयादिभ्यः मुच्यते नात्र संशयः ॥

॥ ப²லஶ்ருதி: ॥

ஆதி³த்யகவசம் புண்யம் அபே⁴த்³யம் வஜ்ரஸன்னிப⁴ம் ।
ஸம்வத்ஸரமுபாஸித்வா ஸாம்ராஜ்யபத³வீம் லபே⁴த் ।
ஸர்வரோக³ப⁴யாதி³ப்⁴ய: முச்யதே நாத்ர ஸம்ஶய: ॥

## ॥ सूर्यस्तोत्रम् ॥

शुक्लाम्बर शान्तये-ओं भू: मम प्रीत्यर्थम्-सूर्यस्तोत्र महा- मन्त्रजपं करिष्ये ॥

अस्य श्रीसूर्यस्तोत्रमहामन्त्रस्य-अगस्त्य ऋषिः- अनुष्टुप् छन्दः-
सूर्यो देवता-सू बीजं यं शक्तिः- मं कीलकम् ।
मम सूर्यप्रसाद सिद्ध्यर्थे जपे विनियोगः ॥

१. आदित्याय अंगुष्ठाभ्यां नमः,
२. असुरारये तर्जनीभ्यां नमः,
३. दिवाकराय मध्यमाभ्यां नमः,
४. प्रभाकराय अनामिकाभ्यां नमः,
५. सहस्रकिरणाय कनिष्ठिकाभ्यां नमः,
६. मार्ताण्डाय करतल कर- पृष्ठाभ्यां नमः,

आदि + य हृदयाय नमः, असुरा ये शिरसे स्वाहा दिवा + शिखायै वषट्, प्रभा कवचाय हुम्, सहस्त्रकिरणाय नेत्र- त्रयाय वौषट्, मार्ताण्डाय अब्वाय फट्, भूर्भुवस्तुवरोमिति दिग्बन्धः ।

## ॥ ஸூர்யஸ்தோத்ரம் ॥

ஶுக்லாம்ப³ர - ஶாந்தயே - ஓம் பூ⁴: - மம - ப்ரீத்யர்த²ம் - ஸூர்யஸ்தோத்ர மஹா- மந்த்ரஜபம் கரிஷ்யே ॥

அஸ்ய ஶ்ரீ ஸூர்ய ஸ்தோத்ர மஹாமந்த்ரஸ்ய - அக³ஸ்த்ய: ருஷி: - அனுஷ்டுப் ச²ந்த³: - ஸூர்யோ தே³வதா - ஸூ பீ³ஜம் - யம் ஶக்தி: - மம் கீலகம் । மம ஸூர்யப்ரஸாத³ ஸித்³த⁴யர்தே² ஜபே விநியோக³: ॥

1. ஆதி³த்யாய அங்கு³ஷ்டா²ப்⁴யாம் நம:,
2. அஸுராரயே தர்ஜனீப்⁴யாம் நம:,
3. தி³வாகராய மத்⁴யமாப்⁴யாம் நம:,

4. ப்ரபா⁴கராய அநாமிகாப்⁴யாம் நம꞉,
5. ஸஹஸ்ரகிரணாய கநிஷ்டி²காப்⁴யாம் நம꞉,
6. மார்தாண்டா³ய கரதல கர- ப்ருஷ்டா²ப்⁴யாம் நம꞉,

ஆதி³ + ய ஹ்ருத³யாய நம꞉, அஸூரா யே ஶிரஸே கா²ஹா தி³வா + ஶிகா²யை வஷட், ப்ரபா⁴ கவசாய ஹூம், ஸஹஸ்த்ரகிரஞ்ய நேத்ர - த்ரயாய வௌஷடு, மார்தாண்டா³ய அப்³வாய ப²ட், பூ⁴ர்பு⁴வஸ்துவரோமிதி தி³க்³ப³ந்த⁴꞉ ।

## ॥ ध्यानम् ॥

ध्यायेत्सूर्यमनन्तकोटिकिरणं तेजोमयं भास्करं
भक्तानामभयप्रदं दिनकरं ज्योतिर्मयं शंकरम् ।
आदित्यं जगदीशमच्युतमजं त्रैलोक्यचूडामणिं
भक्ताभीष्टवरप्रदं दिनमणिं मार्ताण्डमाद्यं शुभम् ॥

### ॥ த்⁴யானம் ॥

த்⁴யாயேத்ஸூர்யமனந்தகோடிகிரணம் தேஜோமயம் பா⁴ஸ்கரம்
ப⁴க்தாநாமப⁴யப்ரத³ம் தி³னகரம் ஜ்யோதிர்மயம் ஶங்கரம் ।
ஆதி³த்யம் ஜக³தீ³ஶமச்யுதமஜம் த்ர்யைலோக்யசூடா³மணிம்
ப⁴க்தாபீ⁴ஷ்டவரப்ரத³ம் தி³னமணிம் மார்தாண்ட³மாத்³யம் ஶுப⁴ம் ॥

लं पृथिव्यात्मने गन्धान् धारयामि - हं आकाशात्मने पुष्पाणि समर्पयामि - यं वाय्वात्मने धूपमाघ्रापयामि - रं वह्न्यात्मने दीपं दर्शयामि - वं अमृतात्मने अमृतं निवेदयामि - सं सर्वात्मने सर्वोपचारान् समर्पयामि ।

லம் ப்ருதி²வ்யாத்மனே க³ந்தா⁴ன் தா⁴ரயாமி - ஹம் ஆகாஶாத்மனே புஷ்பாணி ஸமர்பயாமி - யம் வாய்வாத்மனே தூ⁴பமாக்⁴ராபயாமி - ரம் வஹ்வயாத்மனே தீ³பம் த³ர்ஶயாமி - வம் அம்ருதாத்மனே அம்ருதம் நிவேத³யாமி - ஸம் ஸர்வாத்மனே ஸர்வோபசாரான் ஸமர்பயாமி ।

## ॥ अथ स्तोत्रम् ॥

### ॥ அத² ஸ்தோத்ரம் ॥

कालात्मा सर्वभूतात्मा वेदात्मा विश्वतोमुखः ।
जन्ममृत्युजराव्याधिसंसारभयनाशनः ॥

காலாத்மா ஸர்வபூ⁴தாத்மா வேதா³த்மா விஶ்வதோமுக²꞉ ।
ஜன்மம்ருத்யுஜராவ்யாதி⁴ஸம்ஸாரப⁴யநாஶன꞉ ॥

**ब्रह्मस्वरूप उदये मध्याह्ने तु महेश्वरः ।**
**अस्तमाने स्वयं विष्णुः त्रयीमूर्तिः दिवाकरः ॥**

**ப்3ரஹ்மஸ்வரூப உத3யே மத்4யாஹ்னே து மஹேஶ்வரः ।**
**அஸ்தமானே ஸ்வயம் விஷ்ணுः த்ரயீமூர்திः தி3வாகரः ॥**

**एकचक्ररथो यस्य दिव्यः कनकभूषितः ।**
**सोऽयं भवतु नः प्रीतः पद्महस्तो दिवाकरः ॥**

**ஏகசக்ரரதோ2 யஸ்ய தி3வ்யः கனகபூ4ஷிதः ।**
**ஸோ(அ)யம் ப4வது நः ப்ரீதः பத்3மஹஸ்தோ தி3வாகரः ॥**

**पद्महस्त परंज्योतिः परेशाय नमोनमः ।**
**अण्डयोने महासाक्षिन् आदित्याय नमोनमः ॥**

**பத்3மஹஸ்த பரஞ்ஜ்யோதிः பரேஶாய நமோநமः ।**
**அண்ட3யோனே மஹாஸாக்ஷின் ஆதி3த்யாய நமோநமः ॥**

**कमलासन देवेश भानुमूर्ते नमोनमः ।**
**धर्ममूर्ते दयामूर्ते तत्त्वमूर्ते नमोनमः ॥**

**கமலாஸன தே3வேஶ பா4னுமூர்தே நமோநமः ।**
**த4ர்மமூர்தே த3யாமூர்தே தத்த்வமூர்தே நமோநமः ॥**

**सकलेशाय सूर्याय क्षान्तेशाय नमोनमः ॥**

**ஸகலேஶாய ஸூர்யாய க்ஷாந்தேஶாய நமோநமः ॥**

## ॥ फलश्रुतिः ॥

**क्षयापस्मारगुल्मादि दुर्दोषव्याधिनाशनम् ।**
**सर्वज्वरहरं चैव कुक्षिरोग निवारणम् ॥**

**॥ ப2லஶ்ருதிः ॥**

**க்ஷயாபஸ்மாரகு3ல்மாதி3 து3ர்தோ3ஷவ்யாதி4நாஶனம் ।**
**ஸர்வஜ்வரஹரம் சைவ குக்ஷிரோக3 நிவாரணம் ॥**

இந்த ஸூர்ய ஸ்தோத்ரத்தை ஜபிப்பவர்களுக்கு க்ஷயம்,
அபஸ்மாரம், குல்மம், வயிற்று நோய்) மற்று முள்ள
ஜ்வரம் முதலியன நிவர்த்தியடையும்.

**एतत्स्तोत्र शिवप्रोक्तं सर्वसिद्धिकरं परम् ।**
**सर्वसंपत्करं चैव सर्वाभीष्टप्रदायकम् ॥**

**ஏதத்ஸ்தோத்ர ஶிவப்ரோக்தம் ஸர்வஸித்³தி⁴கரம் பரம் ।**
**ஸர்வஸம்பத்கரம் சைவ ஸர்வாபீ⁴ஷ்டப்ரதா³யகம் ॥**

ஐச்வர்யத்தையும் மற்றுமுள்ள மனோரதங்களையும்
கொடுக்கும் இந்த ஸ்தோத்ரம் ஸ்ரீ பரமசிவனால்
சொல்லப்பட்டது.

---



ஸூர்ய பகவான்

श्री शिवाभ्यां नमः

# आदित्यस्तोत्ररत्नम्

## श्रीमत् अप्पय्यदीक्षितविरचितम्

## ஶ்ரீமதப்பய்ய தீக்ஷிதரவர்கள் அருளிச்செய்த

# ஆதி³த்ய ஸ்தோத்ர ரத்னம்

**आदित्यस्तोत्ररत्नस्य वृत्तीरत्न प्रकाशिका ।**
**अस्माभिरेव क्रियते नातिसंकोचविस्तरा ॥ १ ॥**

**ஆதி³த்யஸ்தோத்ரரத்னஸ்ய வ்ருத்தீரத்ன ப்ரகாஶிகா ।**
**அஸ்மாபி⁴ரேவ க்ரியதே நாதிஸங்கோசவிஸ்தரா ॥ 1 ॥**

“ஆதித்ய ஸ்தோத்ர ரத்னம் என்ற க்ரந்தத்திற்கு அதிகமாக சுருக்கமும் விஸ்தாரமுமில்லாமல் ரத்ன ப்ரகாசிகை என்ற வ்யாக்யானம் என்னுல் செய்யப்படுகிறது.”

முதல் சலோகத்தினுல் ஸகல வேதஸ்வரூபியாயும் ப்ரத்யக்ஷதெய்வமாயும் இருளைப் போக்கி ஒளியைப் பரப்பி அருளைத்தருபவருமான ஸ்ரீஸூர்யநாராயண மூர்த்தியின் காலஸ்வரூபமாய் விளங்கும் இரதத்தை வர்ணிக்கின்றுர்.

**विस्तारायाममानं दशभिरुपगतो योजनानां सहस्रैः**
**चक्रे पञ्चारनामित्रितयवति लसन्नेमिषटके निविष्टः ।**
**सप्तच्छन्दस्तुरङ्गाहितवहनधुरो हायनांशत्रिवर्ग**
**व्यत्क्या क्लप्ताखिलाङ्गः स्फुरतु मम पुरः स्यन्दनथण्डमानोः ॥ १ ॥**

**விஸ்தாராயாமமானம் த³ஶபி⁴ருபக³தோ யோஜனானாம் ஸஹஸ்ரைः**
**சக்ரே பஞ்சாரநாமித்ரிதயவதி லஸன்னேமிஷ்டகே நிவிஷ்டः ।**
**ஸப்தச்ச²ந்த³ஸ்துரங்கா³ஹிதவஹனது⁴ரோ ஹாயனாம்ஶத்ரிவர்க³**
**வ்யத்க்யா க்லப்தாகி²லாங்க³ः ஸ்பு²ரது மம புரः ஸ்யந்த³னத²ண்ட³மானோः ॥ 1 ॥**

ஸூர்யபகவானின் இரதம் பதினுயிரம் யோஜனை நீளமும் அகலமுமுள்ளது. ஒரு சக்ரமும் ஐந்து ஆரங்களும் * ஆறுவட்டங்களும் மூன்று மேகலையுடன் கூடிய ஒரு குடமும் ஏழு குதிரைகளுமுள்ளது. காயத்ரீ, உஷ்ணிக், அனுஷ்டுப், ப்ருஹதீ, பங்தீ, த்ரிஷ்டுப், ஜகதீ என்ற ஏழு சந்தஸ்ஸுக்களும், 7 குதிரைகளாக அமைந்தன.

**"सप्तत्वा हरितोरथे वहन्ति देवसूर्य"**

**"ஸப்தத்வா ஹரிதோரதே² வஹந்தி தே³வஸூர்ய"**

என்ற மந்திரம் இதை விளக்குகிறது.

[* வண்டி சக்ரத்தின் குடத்திலும் வட்டத்திலும் கோர்க்கப்பட்ட கட்டைகள்.]

இந்த இரதத்திற்கு சக்ரம் முதலிய அவயவங்களாக வருஷத்தின் அவயவங்க ளான பகல் இரவு கலை காஷ்டை முஹூர்த்தம் முதலியவைகளும், தர்மம் அர்த்தம் காமம் என்ற த்ரிவர்கமும் அமைந்துள்ளது. அதாவது பகல் சக்ரத்தின் நடுவிலுள்ள மூன்று மேகலையுடன் கூடிய குடம், ஐந்து ருதுக்களும் ஹேமந்த சிசிர ருதுக்களை ஒன்றாகக் கருதி, அல்லது மத்ஸ்ய புராணத்தின்படி ஸம்வத்ஸரம், பரிவத்ஸரம். உத்வத்ஸரம், அனுவத்ஸரம், வத்ஸரம் என்ற ஐந்தும் இரத்தின் ஐந்து அரங்கள். வஸந்தம் முதலிய ஆறு ருதுக்களும் ஆறு வட்டங்கள். வருஷம் இரதத்தின் நடுவில் யஜமானன், உட்காருமிடம், இதற்கு **नीडम्** **(நீட³ம்)** என்று பெயர். தக்ஷிணாயனம் உத்தராயணம் இரண்டும் குதிரையை தேரில் கட்டுவதற்காக இருபக் கங்களிலும் கோர்க்கப்பட்ட கட்டைகள். இதற்கு **कूबरम्** **(கூப³ரம்)** என்று பெயர். முஹூர்த்தங்கள் கட்டையையும் தோல்களையும் சேர்க்கும் இரும்புக் கீல்கள். இதற்கு **बन्धनम्** **(ப³ந்த⁴னம்)** என்று பெயர். கலைகள் நுகத்தடியின் கீல்கள். இதற்கு, **शम्या** **(ஶம்யா)** என்று பெயர். காஷ்டைகள் இரதத்தின் முன் பாகத்தில் நுணி நீண்ட தாகவும் கூர்மையாகவும் போடப்பட்ட கட்டை. இதற்கு **घोणा** **(கோணா)** என்று பெயர். க்ஷணங்கள் அச்சு, நிமிஷங்கள் இரதத்தின் அடிபாகத்தில் நீளமாய்ப் போடப்பட்ட கட்டை, இதற்கு **अनुकर्षः** **(அனுகர்ஷம்:)** என்று பெயர். லவங்கள் நுகத்தடிக்கும் தேர்த்தட்டிற்குமுள்ள கட்டை, இதற்கு **ईषा** **(ஈஷா)** என்று பெயர். இரவு யஜமானனை க்காப்பதற்காக எதிரில் வைக்கப்பட்ட ஒரு கட்டை. இதற்கு **वरूथः** **(வரூத²ம்:)** என்று பெயர். தர்மம் கொடி மரம், **ध्वजः** **(த்⁴வஜ:)** என்று பெயர். அர்த்தம் காமம் இரண்டும் நுகத்தடிக்கும் அச்சுக்கும் கோடி பாகங்கள்.

நிமேஷம் என்பது இமை கொட்டும் நேரம். அதில் பாதி பாகம் லவம். அதில் கால் பாகம் க்ஷணம். 18 நிமேஷங்கள் கொண்டது ஒரு காஷ்டை. 30 காஷ்டைகள் கொண்டது ஒரு முஹூர்த்தம், இரண்டு நாழிகைகள், இவ்விதம் அவயவங்களைத் தெரிந்து கொண்டு த்யானம் செய்தால் விசேஷ பலனுண்டு. இவ்விதம் அமைந்துள்ள ஸூர்ய பகவானின் இரதம் என் எதிரில் தோன்றட்டும் - என்று அர்த்தம். இவ்விதம் இரதத்தின் அமைப்பைப்பற்றிக் கூறினோம். இனிமேல் இந்த இரதம் சுற்றிவரும் வழியைப்பற்றி புராணங்களிலுள்ளதை விவரிப்போம்.

ஐம்பது கோடியோஜனை விஸ்தாரமுள்ள பூகோளத்தின் நடுவில் லக்ஷம் யோஜனை விஸ்தாரமுள்ளது ஜம்பூத்வீபம். இது உப்புஸமுத்திரத்தினால்

சூழப்பட்டும் மஹாமேருபர்வதத்தினுல் தாங்கப்பட்டுமிருக்கிறது. மஹாமேரு பர்வதம் 16,000 யோஜஊன அடிபாகமும் 32,000 யோஜஊன சிகரத்தின் விஸ்தாரமும் 84,000 யோஜஊன உயரமுமுள்ளது. தாமரை புஷ்பம் போல் அமைந்திருக்கும் பூமண்டலத்திற்கு கர்ணிகை போல் அமைந்துள்ளது. தங்க மயமானது. உப்பு ஸமுத்ரத்தைக் காட்டிலும் இரு மடங்கு விஸ்தாரமுள்ள ப்லக்ஷத்வீபம் அந்த உப்பு ஸமுத்ரத்தைச் சூழ்ந்திரு க்கிறது. அதைச் சூழ்ந்துள்ளது கரும்புஸமுத்ரம். அதைக் சூழந்துள்ளது சால்மலித் வீபம். அதைச் சூழ்ந்துள்ளது ஸுராமயமான ஸமுத்ரம். இவ்விதம் இருமடங்கு விஸ்தாரமுள்ள நெய், தயிர், பால், சுத்தஜலமயமான் ஸமுத்ரங்களால் சூழப்பட்டு ள்ள குச, க்ரௌஞ்ச, சாக, புஷ்கர, த்வீபங்கள் இருக்கின்றன. புஷ்கரத்வீபத்தின் நடுவில் 50,000, யோஜஊன உயரமுள்ள சக்ராகாரமான மானஸோத்தரம் என்று ஒரு
பர்வதம் இருக்கிறது. அதன் சிகரத்தின் மேல் 50,000, யோஜஊன தூரத்தில் ஸூர்ய ரதத்தின் சக்ரம் இருக்கிறது. அந்த சக்ரத்தின் நடுவில் கோர்க்கப்பட்ட அச்சுக்கட்டை ஜம்பூத்வீபத்தின் நடுவிலுள்ள மஹா மேரு பர்வதத்தின்மீது 16,000, யோஜஊன தூரம் கடந்து ஸஞ்சரிக்கின்ற வாயுஸ்கந்தத்திஞல் பிடிக்கப்பட்டு 1½ கோடியே ஏழுலக்ஷம் யோஜஊன தூரம் நீள முள்ளதாக அமைக்கப்பட்டுள்ளது. இந்த அச்சுக் கட்டையில் இரதம் இருக்கிறது. இது த்ருவமண்டலத்திலுள்ள வாயுவிஞல் இழுக்கப்பட்டு வருகிறது. இவ்விதம் மானஸோத்தர பர்வதத்தின் மீதுள்ள இரதமானது ஏழு குதிரைகள் பூட்டப்பட்டு எண்ணெயாடும் செக்கு ஒரு சக்ரத்துடன் இழுக்கப்படுவது போல் இழுக்கப்படுகின்றது. இந்த இரதத்தின் மீது ஸூர்ய பகவான் இருந்துகொண்டு மஹாமேரு பர்வதத்தைச் சுற்றி வருகின்ருர்.

ச்லோகத்தில் சக்ரத்தின் மீது ரதமிருப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆஞல் ரதம் அச்சு மரத்தில் தான் இருக்கிறது. அப்படியாஞலும் சக்ரத்திலுள்ள அச்சிலிரு ப்பதால் சக்ரத்திலிருப்பதாகக் கூறுவது பொருந்தும் என்று அபிப்ராயம். 1

ஸூர்ய மண்டலத்தின் மஹிமையைப் பற்றி இந்த சலோகத்தில் வர்ணிக்கி ன்ருர்.

**आदित्यै रप्सरोभिः मुनिभिरहिवरैः ग्रामणीयातुधानैः**
**गन्धर्वैर्वालखिल्यैः परिवृतदशमांशस्य कृत्स्नं रथस्य ।**
**मध्यं व्याप्याधितिष्ठन् मणिरिव नभसो मण्डलचण्डरश्मेः**
**ब्रह्मज्योतिर्विवर्तः श्रुतिनिकरघनीभावरूपस्समिन्धे ॥ २ ॥**

**ஆதி3த்யை ரப்ஸரோபி4: முனிபி4ரஹிவரை: க்3ராமணீயாதுதா4ஊன:**
**க3ந்த4ர்வைர்வாலகி2ல்யை: பரிவ்ருதத3ஶமாம்ஶஸ்ய க்ருத்ஸ்னம் ரத2ஸ்ய ।**
**மத்4யம் வ்யாப்யாதி4திஷ்ட2ன் மணிரிவ நப4ஸோ மண்ட3லசண்ட3ரஶ்மே:**
**ப்3ரஹ்மஜ்யோதிர்விவர்த: ஶ்ருதிநிகரக4னீபா4வரூபஸ்ஸமிந்தே4 ॥ 2 ॥**

ஆதித்யர்கள். அப்ரஸ்ஸுக்கள், ரிஷிகள், ஸர்ப்பங்கள், க்ராமணீக்கள்,* [* தேவர்களில் சிலர்.] இராக்ஷஸர்கள், கந்தர்வர்கள் இந்த ஏழு கணங்கள் ஸூர்யனு

டைய பரிவார தேவதைகள். ஒவ்வொரு கணத்திலும் 12 பேர்களிருக்கிறுர்கள். இவர்கள் சித்திரை முதலிய மாதங்களுக்கு அதிதேவதைகள். இவர்கள் ஒவ்வொரு மாதங்களிலும் ஏழு பேர் சேர்ந்த கணங்களாக ஸூர்ய மண்டலத்தைச் சுற்றிலுமிரு ந்து கொண்டு மத்தியிலுள்ள ஸூர்யபகவாஜனயுபாஸித்து வருகிறுர்கள். வாலகில்யர் கள் என்று 10 லக்ஷம் பேர்கஊ பார்வதீ விவாக ஸமயத்தில் ப்ரஹ்மதேவன் தன் தேஜஸ்ஸினுல் அக்னியில் உண்டாக்கினுர். இவர்கள் கட்டவிரல் அளவுள்ளவர்கள். ஸூர்ய கிரணங்கஊப் பானம் செய்துகொண்டு ஸூர்யன் போன்ற ஒளியுடன் ஸூர்யஜனச் சுற்றிவருகிறுர்கள். இந்த வாலகில்யர்களும் முன் சொல்லிய 12 கணங்களும் பதினுயிரம் யோஜஊயுள்ள ஸூர்ய ரதத்தைச் சுற்றிலும் ஆயிரம் யோஜஊ விஸ்தாரத்தை வ்யாபித்துக் கொண்டு ஸூர்ய பகவாஊ உபாஸித்து வருகிறுர்கள். மிச்சமுள்ள ஒன்பதுனுயிரம் யோஜஊ விஸ்தாரமுள்ள நடு பாகத்தை ஸூர்ய மண்டலம் வ்யாபித்து வருகிறது. இதைப்பற்றி பின் ச்லோகத்தில் விவரிக்கப் போகின்ருேம். இவ்வளவு விஸ்தாரமுள்ள ஸூர்ய மண்டலம் நமது பார்வைக்கு மிகச் சிறியதாகக் காணப்படுகிறது. எப்படி உயர்ந்த மஊலயின் சிகரத்தி லிருந்து பார்த்தால் பூமியிலுள்ள பெரிய கோபுரங்கூட சிறியதாகக் காணப்படுகிற தோ, அவ்விதம் அளவு கடந்த ஆகாயத்தில் வெகு தூரத்திற்கு அப்பால் செல்லுகின்ற ரதம் மிகச் சிறியதாகக் காணப்படுகிறது. இதை ச்லோகத்தில்

**'मणिरिव नभसः'**

**'மணிரிவ நப⁴ஸ:'**

என்று ஆகாயத்திற்கு மணிபோல் விளங்குகின்றதென்று வர்ணிக்கின்றுர். வேதங்க ளின் ஸ்வரூபமாயமைந்துள்ள இந்த மண்டலம் உலகத்திற்குக் காரணமான பரப்ரஹ் மத்தின் ப்ரகாஶத்தால் விளங்குகிறது. இவ்விதம்

**एषा त्रय्येव विद्या तपति, येन सूर्यस्तपति तेजसेद्धः,**
**त्रयीमयाय त्रिगुणात्मधारिणे, तमेव भान्तमनुभाति सर्वे**

**ஏஷா த்ரய்யேவ வித்³யா தபதி, யேன ஸூர்யஸ்தபதி தேஜஸேத்³த⁴:,**
**த்ரயீமயாய த்ரிகு³ணத்ம- தா⁴ரிணே, தமேவ பா⁴ந்தமனுபா⁴தி ஸர்வே**

என்ற ச்ருதிகளும் ஸ்ம்ருதிகளும் கூறுகின்றன.

சைத்ரம் முதலிய மாதங்களுக்கு அதிகாரியாயுள்ள தேவகணங்கள்: -

| மாதம் | ஆதித்யன் 1 | முனிவர் 2 | ஸர்ப்பம் 3 | கந்தர்வர் 4 | அப்ஸரஸ் 5 | க்ராமணீ 6 | இராக்ஷஸன் 7 |
|---|---|---|---|---|---|---|---|
| 1. சைத்ரம் | தாதா | புலஸ்த்யர் | வாஸுகி | தும்புரு | க்ருதஸ்தலா | ரதக்ருத் | ரக்ஷோஹேதி |
| 2. வைசாகம் | அர்யமா | புலஹர் | கங்கரீகன் | நாரதர் | புஞ்சகஸ்தலா | ரதௌஜஸ் | ப்ரஹேதி |
| 3. ஜ்யேஷ்டம் | மித்ரன் | அத்ரி | தக்ஷகன் | ஹாஹா | மேனகா | ரதஸ்வனன் | பௌருஷேயன் |
| 4. ஆஷாடம் | வருணன் | வஸிஷ்டர் | நாகன் | ஹூஹூ | ஹைஜன்யா | ரதமித்ரன் | வதன் |
| 5. ஶ்ராவணம் | இந்திரன் | அங்கிரஸ் | ஏலாபுத்ரன் | விஶ்வாவஸு | ப்ரம்லோசந்தீ | ஸ்ரோதஸ் | ஸர்பன் |
| 6. பாத்ரபதம் | விவஸ்வான் | ப்ருகு | சங்கபாலன் | உக்ரஸேனன் | நிம்லோசந்தீ | அருணன் | வ்யாக்ரன் |
| 7. ஆஶ்வினம் | பர்ஜன்யன் | பரத்வாஜன் | ஐராவதன் | ஸர்வாவஸு | விச்வாசீ | ஸேனஜித் | ஆப: |
| 8. கார்திகம் | பூஷர் | கௌதமன் | தனஞ்ஜயன் | வஸுருசி | க்ருதாசீ | ஸுஷேணன் | வாயு |
| 9. மார்கசீர்ஷம் | அம்ஸு | காச்யபன் | மஹாபத்மன் | சித்ரஸேனன் | ஊர்வசி | தார்க்ஷ்யன் | வித்யுத் |
| 10. பௌஷம் | கபஸ்திமான் | க்ரது | கார்கோடகன் | ஊர்ணாயு | பூர்வசித்தி | அரிஷ்டநேமி | ஸூர்யன் |
| 11. மாகம் | த்வஷ்டா | ஜமதக்னி | கம்பலன் | த்ருதராஷ்ட்ரன் | திலோத்தமா | ரதஜித் | ப்ருஹ்மோபேதன் |
| 12. பால்குனம் | விஷ்ணு | விச்வாமித்ரன் | அச்வதரன் | ஸூச்யவர்ச்ஸ்: | ரம்பா | ஸத்யஜித் | யஜ்ஞோபேதன் |

| மாதம் | ஆதித்யன் 1 | முனிவர் 2 | ஸர்ப்பம் 3 | கந்தர்வர் 4 | அப்ஸரஸ் 5 | க்ராமணீ 6 | இராக்ஷஸன் 7 |
|---|---|---|---|---|---|---|---|
| 1. चैत्रम् | धाता | पुलस्त्य: | वासुकि: | तुम्बुरु: | क्रुतस्थला | रथक्रुत् | रक्षोहेति: |
| 2. वैशाखम् | अर्यमा | पुलह: | कङ्करीक: | नारद: | पुञ्चकस्थला | रथौजा: | प्रहेति |
| 3. ज्येष्ठम् | मित्र: | अत्रि | तक्षक: | हाहा: | मेनका | रथस्वन: | पौरुषेय: |
| 4. आषाढम् | वरुण: | वसिष्ठ: | नाग: | हूहू: | सहजन्या: | रथमित्र: | वध: |
| 5. श्रावणम् | इन्द्र: | अङ्गिरा: | एलापुत्र: | विश्वावसु: | ब्रम्लोचन्ती | स्रोत: | सर्प: |
| 6. भाद्रपदम् | विवस्वान् | ब्रुगु | शंखपाल: | उक्रसेन: | निम्लोचन्ती | अरुण: | व्याघ्र: |
| 7. आश्विनम् | पर्जन्य: | भरद्वाज: | ऐरावत: | सर्वावसु | विश्वाची | सेनजित् | आप: |
| 8. कार्तिकम् | पूषा | गौतम: | धनज्जय: | वसुरुचि | घ्रुताची | सुषेण: | वायु: |
| 9. मार्गशीर्षम् | अंशु: | काच्यप: | महापत्म: | चित्रसेन: | उर्वशी | तार्क्षय: | विध्युत् |
| 10. पौषम् | गभस्तिमान् | क्रतु: | कार्कोटक: | ऊर्णायु | पूर्वचित्ति | अरिष्ठनेमि | सुर्य: |
| 11. माघम् | त्वष्ठा | जमदग्नि | कम्बल: | ध्रुतराष्ट्र: | तिलोत्तमा | रथाजित् | ब्रुह्मोपेत: |
| 12. फाल्गुनम् | विष्णु: | विच्वामित्र: | अच्वतर: | सूर्यवर्चा: | रम्भा | सत्यजित् | यज्ञोपेत: |

இவ்விதம் ஏழு தேவதைகள் சேர்ந்த ஒவ்வொரு கணமும் சைத்ரம் முதலிய 12 மாதங்களுக்கு அதிதேவதைகளாகவும், இரண்டு கணங்கள் வஸந்தம் முதலிய 6 ருதுக்களுக்கு அதிகாரிகளாகவும் இருக்கிருர்கள். இவர்கள் பெயரைச் சொன்னுல் பாபங்கள் விலகுமென்று புராணங்கள் கூறுகின்றன.

இந்த ஶ்லோகத்தில் ஸூர்யமண்டலத்திலிருந்து வெளிவரும் ஆயிரக்கணக் கான கிரணங்களின் மஹிமையைப் பற்றி துதிக்கின்ருர்.

**निर्गच्छन्तोऽर्कविम्बान्निखिलजनिमतां हार्दनाडीप्रविष्टाः**
**नाड्यो वस्वादि बृन्दारकगणमधुनस्तस्य नानादिगुत्थाः ।**
**वर्षन्तःस्तोकमुष्णं तुहिनमपि जलान्यापिबन्तस्समन्तात्**
**पित्रादीनां स्वधौषध्यमृतरसकृतो भान्ति कान्तिप्ररोहाः ॥ ३ ॥**

**நிர்க3ச்ச2ந்தோ(அ)ர்கவிம்பா3ந்நிகி2லஜனிமதாம் ஹார்த3நாடீ3ப்ரவிஷ்டாः**
**நாட்3யோ வஸ்வாதி3 ப்3ருந்தா3ரகக3ணமது4னஸ்தஸ்ய நாநாதி3கு3த்தா2ः ।**
**வர்ஷந்தःஸ்தோகமுஷ்ணம் துஹினமபி ஜலான்யாபிப3ந்தஸ்ஸமந்தாத்**
**பித்ராதீ3னும் ஸ்வதௌ4ஷத்4யம்ருதரஸக்ருதோ பா4ந்தி காந்திப்ரரோஹாः ॥ 3 ॥**

ஸூர்ய மண்டலத்திலிருந்து வெளிவரும் கிரணங்கள் பிராணிகளின் தலையி லுள்ள ப்ரஹ்மரந்த்ரத்தின் வழியாக ஹ்ருதய நாடிகளை யடைகின்றன. இதைப் பற்றி சாந்தோக்யோப நிஷத்தில் தஹர வித்யையைச் சொல்லுமிடத்தில் நன்கு கூறப்படு கிறது. அதாவது ஸூர்யனிடமிருந்து வரும் கிரணங்கள், எவ்விதம் ஒரு க்ராமத்திற் கும் வெகு தூரமுள்ள மற்றெரு க்ராமத்திற்கும் நடுவில் நீளமாயுள்ள ரஸ்தாவானது இரு கிராமங்களையும் அடைகிறதோ, அதே மாதிரி ஸூர்ய மண்டலத்திலிருந்து வெகு தூரம் கடந்துள்ள பூமியிலிருக்கும் பிராணிகளின் ஹ்ருதய நாடிகளை வ்யாபிக்கின்றன. இவ்விதம் அறிந்து உபாஸிப்பவன் ஹ்ருதயத்திலுள்ள அனேக நாடிகளில் ப்ரதானமான 101 நாடிகளுக்குள் ப்ருஹ்மரந்த்ரம் வரை செல்லும் ஸுஷும்ன நாடியின் வழியாக ஸூர்ய மண்டலத்தை க்ஷண நேரத்திலடைந்து அதன் வழியாக ப்ரஹ்ம லோகம் போகிருன். ப்ரஹ்ம லோகத்திலிருந்து ப்ரஹ்மா வின் அனுக்ரஹத்தால் ஞானமடைந்து மோக்ஷமடைகிருன். மறுபடி திரும்புவதி ல்லை. இவ்விதமறியாதவன் மற்றுமுள்ள பல நாடிகளின் வழியாகச் சென்று பலவிதமான கர்மகதிகளை யடைகிருன். ப்ரஶ்னோப நிஷத்தில் ஹ்ருதயத்திலிருந்து ப்ரதானமாக 101 நாடிகளும் அதற்கு கிளையாக ஒவ்வொன்றுக்கும் 100, மறுபடி அதன் கிளையாக 72000 நாடிகளும் இருப்பதாகக் கூறியிருக்கிறது.

மேலும் வஸ்வாதி தேவகணங்கள் ஸூர்ய மண்டலத்திலிருந்து நாற் புறங்களிலும் பரவும் கிரணங்களை தேன்போல் ஆஸ்வாதனம் செய்கிருர்கள். சாந்தோ க்யோபநிஷத் மூன்றுவது அத்யாயம் மதுவித்யையைப் பற்றிச் சொல்லுமிடத்தில் இது நன்கு விளங்குகிறது.

நம்மால் காணப்படும் ஸூர்ய மண்டலம் தேவர்கள் ஸேவிக்கும் தேன், அந்தரிக்ஷ லோகம் தேனடை. ஸ்வர்கலோகம் தேனடைவைக்கும் கம்பு. அந்தரிக்ஷ லோகம் ஸ்வர்கத்திற்கு கீழே இருப்பதால் கம்பில் தேனடை தொங்குவது போல் இருக்கிறது. அதன் நடுவில் ஸூய மண்டலம் தேன் போலிருக்கிறது. தேனடையில் தேனீக்கள் புஷ்பங்களிலிருந்து கொஞ்சங் கொஞ்சமாக தேன் சொட்டுக்களைக் கொண்டுவருவது போல், ருக்வேத மந்த்ரங்களாகிய தேனீக்கள், ருக்வேதத்தினுல் செய்யக்கூடிய கர்மாக்களாகிய புஷ்பங்களிலிருந்து, கர்மபலமாகிய தேன்களை, கர்மாக்களை யனுஷ்டிக்கும் யஜமானன் வஸ்வாதி தேவர்களாகி பருகுவதற்காக, ஸூர்ய மண்டலத்தில் சேர்த்து வைக்கின்றன. இதே மாதிரி யஜுர் வேத மந்த்ரங்கள், ஸாம வேத மந்த்ரங்கள், அதர்வ வேத மந்த்ரங்கள், அந்தந்த வேதங்களினுல் செய்யப்பட்ட கர்மாக்களின் பலனுன தேன்களை ஸூர்ய மண்டலத்தில் சேர்த்து வைக்கின்றன. தேனீக்கள் புஷபங்களின் ஸாரமான பாகத்தைக் கசக்கி ரஸமான தேனைக் கொண்டுவருவது போல் மந்திரங்கள் கர்மாக்களில் விநியோகப்பட்டு பயனையளிக்கும் யோக்யதையை யுண்டுபண்ணுகின்றன. கர்மபலன் தேன் போல் அனுபவிப்பதற்கு இனிமையாக இருக்கிறபடியால் தேனுகக் கூறப்படுகிறது.

ஸூர்ய மண்டலத்திலிருந்து கிழக்கு நோக்கி வரும் கிரணங்களை வஸுக்கள் ஸேவிக்கிறுர்கள். தெற்கு நோக்கி வரும் கிர்ணங்களை ருத்ரர்களும், மேற்கு நோக்கி வருபவைகளை ஆதித்யர்களும், வடக்கு நோக்கி வருபவைகளை மருத்துக்களும், மேல் நோக்கிச் செல்லுபவைகளை ஸாத்யர்களும் ஸேவிக்கிறுர்கள்.

மேலும் ஸூர்ய மண்டலத்தில் ஆயிரம் கிரணங்கள் ப்ரதானமாக விளங்குகின் றன. அதில் சைத்ரம் முதலிய 4 மாதங்களில் 300 கிரணங்கள் **சுக்ரம்** என்ற பெயருடன் தாபத்தைக் கொடுக்கின்றன. ஶ்ராவணம் முதலிய 4 மாதங்களில் 400 கிரணங்கள் **அம்ருதம்** என்ற பெயருடன் ஜலத்தைக் கொடுக்கின்றன. பிறகு மார்கஶீர்ஷம் முதலிய 4 மாதங்களில் 300 கிரணங்கள் பனியைக் கொடுக்கின்றன. இந்த ஆயிரம் கிரணங்களும் சேர்ந்து கோடை காலத்தில் ஸமுத்ரம், நதிகள், குளம், குட்டை முதலிய இடங்களிலிருந்து ஜலத்தைக் குடிக்கின்றன. இந்த கிரணங்களே பித்ருக்களுக்கு ஸ்வதா ரூபமாகவும், மனிதர்களுக்கு ஓஷதிகளின் ரஸரூபமாகவும், தேவர்களுக்கு அம்ருத ரூபமாகவும், இருந்து திருப்தி பண்ணிவைக்கின்றன. இவ்விதம் ஸூர்ய கிரணங்கள் இருளைப் போக்குவது மட்டுமில்லாமல் எல்லாப் பிராணிகளுக்கும் ஜீவன ஸாதனங்களாயுமிருக்கின்றன.

**3**

“இவ்விதம் வர்ணிக்கப்பட்ட ஆயிரக்கணக்கான கிரணங்களில் ஸுஷும்னு முதலிய ஏழு கிரணங்கள், நவக்ரஹங்கள், நக்ஷத்ரங்கள் இவைகளுக்கு ப்ரகாசத் தைக் கொடுக்கின்றன. இவைகளே ப்ரளய காலத்தில் ஏழு ஸூர்யர்களாக இருந்து கொண்டு மூன்று உலகங்களையும் எறிக்கின்றன என்பதை இந்த ஸ்லோகத்தில் விளக்குகிறுர்.

**श्रष्टास्तेषां सहस्रं त्रिदिववसुधयोः पञ्चदिग्व्याप्तिभाजां**
**शुभ्रांशुं तारकौष शशितनयमुखान् पञ्च चोद्भासयन्तः ।**
**आरोगभ्राजमुख्यास्त्रिभुवनदहने सप्तसूर्या भवन्तः**
**सर्वान्व्याधीन सुषुम्नाप्रभृतय इह मे सूर्यपादाः क्षिपन्तु ॥ ४ ॥**

**ஶ்ரஷ்டா2ஸ்தேஷாம் ஸஹஸ்ரம் த்ரிதி3வ**
**வஸுத4யோ: பஞ்சதி3க்3வ்யாப்திபா4ஜாம்**
**ஶுப்4ராம்ஶும் தாரகௌஷ ஶஶிதனய**
**முகா2ன் பஞ்ச சோத்3பா4ஸயந்த: ।**
**ஆரோக3ப்4ராஜமுக்2யாஸ்த்ரிபு4வனத3ஹனே**
**ஸப்தஸூர்யா ப4வந்த:**
**ஸர்வான்வ்யாதீ4ன ஸுஷும்னப்ரப்4ருதய**
**இஹ மே ஸூர்யபாதா3: க்ஷிபந்து ॥ 4 ॥**

ஸூர்ய பகவான் மஹா மேரு பர்வதத்தைச் சுற்றிவரும் பொழுது முன் சொல்லிய கிரணங்கள் ஐந்து திக்குகளை வ்யாபிக்கின்றன. அதாவது முதல் ஶ்லோக த்தில் கூறியபடி மானஸோத்தர பர்வதத்தின் மீது கிழக்கு முதலான நான்கு திஶைகளில் தேவேந்திரன் முதலிய நான்கு திக்பாலர்களின் பட்டணங்கள் இருக்கின்றன. அதில் இந்த்ர பட்டணமான அமராவதி கிழக்கு திக்கிலுள்ளது. யமனின் பட்டணமான ஸம்யமிநீ தெற்கிலுள்ளது. வருணனின் பட்டணமான ஸுகா மேற்கு திக்கிலுள்ளது. ஸோமனின் பட்டணமான விபா வடக்குதிக்கிலுள்ளது. ஸூர்யன் அமராவதியில் இருக்கும் பொழுது ஆங்குள்ளவர்களுக்கு மத்யாஹ்னம். ஸம்யமனீயில் இருப்பவர்களுக்கு உதயம். விபா என்ற பட்டணத்திலுள்ளவர்களுக்கு அஸ்தமய காலம். ஈசானதிக்கிலுள்ளவர்களுக்கு பகல் மூன்றுவது யாமம். அக்னி திக்கிலுள்ளவர்களுக்கு முதல் யாமம். இவ்விதம் ஒரே இடத்திலிருந்து கொண்டு ஐந்து திஶைகளை வ்யாபிக்கின்றுர்.

ஸூர்ய கிரணங்களில் ப்ரதானமாயுள்ளது ஏழு கிரணங்கள், அவை. 1. ஸுஷும்ஞ, 2. ஹரிகேச: 3. விச்வகர்மா, 4. விச்வ வ்யசா: 5. ஸம்யத்வஸு: 6. அர்வாக்வஸு: 7. ஸ்வராட். என்று வேதப்ரஸித்தமான பெயருள்ளவை. அதில் ஸுஷும்ஞ என்ற கிரணம் சுக்ல பக்ஷத்தில் ஒவ்வொரு நாளும் ப்ரகாசத்தைக் கொடுத்து சந்திரனை பூர்ணிமை யன்று 16 கலையுடன் பிரகாசிக்கச் செய்கிறது. இவ்விதம் ப்ரகாசிக்கும் அம்ருதமயமான சந்திரனை க்ருஷ்ண பக்ஷத்தில் தேவர்கள் ஒவ்வொரு கலையாகப் பருகுகிறுர்கள். அமாவாஸ்யையன்று 1 கலை மட்டும் மிச்சமா கிறது. இவ்விதம் தேவர்களுக்கு ஆஹாரமளிக்கிறது. பூமியில் ஓஷதிகளில் ப்ரவேசித்து மனிதர்களுக்கும் ஆஹாரமளிக்கிறது. ஜலமாகப் பொழிந்து மரம், செடி, கொடி, பக்ஷி, மிருகம் இவைகளுக்கும் ஆஹாகாரமளிக்கின்றது. ஸ்வதா ரூபமாக பித்ருக்களுக்கும் ஆஹகாரமளிக்கின்றது.

ஹரிகேஶம் * என்ற கிரணம் அஶ்வினி முதலிய நக்ஷத்ரங்களுக்கு ப்ரகாஶத்தைக் கொடுக்கின்றது. விஶ்வகர்மா என்ற கிரணம் தெற்கே இருந்து கொண்டு புதக்ரஹத்திற்கு ப்ரகாசத்தைக் கொடுக்கின்றது. விச்வவ்யசா: என்ற கிரணம் மேற்கே இருந்து கொண்டு சுக்ரக்ரஹத்திற்குப்ரகாசத்தைக் கொடுக்கிறது. இவ்விதம் ஸம்யத்வஸு என்ற கிரணம் அங்காரக க்ரஹத்திற்கும், அர்வாக்வஸு என்ற கிரணம் குரு க்ரஹத்திற்கும், ஸ்வராட் என்ற கிரணம் ஶனைஶ்சரக்ரஹத்திற்கும் ப்ரகாசத்தைக் கொடுக்கின்றது.

* இந்த கிரணங்களைப் பற்றி தைத்திரீய ஸம்ஹிதை கா-4-ப்ர-4-அனு-3-ல் கூறப்பட்டிருக்கிறது.

மேலும் இவைகளே ப்ரளயகாலத்தில் आरोगः (ஆரோக³ம்:) भ्राजः (ப்⁴ராஜ:) पटरः (படர;) पतङ्गः (பதங்க³:) स्वर्णरः (ஸ்வர்ணர:) ज्योतिषीमान् (ஜ்யோதிஷீமான்) विभासः (விபா⁴ஸ:) என்ற ஏழு ஸூர்யர்களாக இருந்து கொண்டு ஜலம் முழுவதையும் வற்றச் செய்து மூவுலகத்தையும் எறிக்கின்றன. இவ்விதம் மஹிமை பொருந்திய ஸூர்ய கிரணங்கள் எல்லா வ்யாதிகளையும் போக்கடிக்கட்டும். **4**

சைத்ரம் முதலிய 12 மாதங்களுக்கும் அதிகாரிகளான த்வாதஶாதித்யர்கள் ஒவ்வொரு மாதங்களிலும் ஆயிரக்கணக்கான தன் தன் கிரணங்களைக் கொண்டு பூமியைச் சுத்தம் செய்கிறுர்கள். இவ்விதமுள்ள கிரணங்கள் 96000. இதன் மஹிமையை இந்த ஸ்லோகத்தில் கூறுகிறுர்.

**आदित्यानाश्रिताष्षण्णवतिगुणसहस्रान्विता रश्मयोऽन्ये**
**मासे मासे विभक्तास्त्रिभुवनभवनं पावयन्तः स्फुरन्ति ।**
**येषां भुव्यप्रचारे जगदवनकृतां सप्तरश्म्युत्थितानां**
**संसर्फे चाधिमासे व्रतयजनमुखास्सक्रिया न क्रियन्ते ॥ ५ ॥**

**ஆதி³த்யாநாஶ்ரிதாஷ்ஷண்ணவதிகு³ணஸஹஸ்ரான்விதா ரஶ்மயோ(அ)ன்யே**
**மாஸே மாஸே விப⁴க்தாஸ்த்ரிபு⁴வனப⁴வனம் பாவயந்த: ஸ்பு²ரந்தி ।**
**யேஷாம் பு⁴வ்யப்ரசாரே ஜக³த³வனக்ருதாம் ஸப்தரஶ்ம்யுத்தி²தானும்**
**ஸம்ஸர்பே² சாதி⁴மாஸே வ்ரதயஜனமுகா²ஸ்ஸக்ரியா ந க்ரியந்தே ॥ 5 ॥**

முன் ஶ்லோகத்தில் சொல்லிய ஏழு கிரணங்கள் விஸ்தாரத்தை யடைந்து 96,000 கிரணங்களாக த்வாததித்யர்களை யடைந்து ஒவ்வொரு மாதங்களிலும் அதற்கு அதிகாரியான ஆதித்யன் மூலம் மூவுலகிலும் பரவி பரிசுத்தம் செய்கின்றன.

ஶுக்ல பக்ஷம் ப்ரதமை முதல் அமாவாஸ்யை முடிய சாந்திரமானப்படி ஒரு மாதம். மேஷாதி ராசிகளில் ஸூர்ய னிருக்கும் பொழுது அந்தந்த ராசியில் ஸூர்யனிருந்தால் ஸௌராமானப்படி ஒரு மாதம். சாந்த்ரமானப்படி ஒரு மாதத்திற்குள் ஒரு ராசியிலிருந்து மற்றெரு ராசிக்கு ஸூர்யன் போகாவிட்டால்

(மாதப் பிறப்பு இல்லாத போனுல்) அது ஜ்யோதிஷ ஸ்ஸாஸ்த்ர ப்ரஸித்தமான மத்ய கணனத்தால் அதிகாரிதமென்றும் ஸ்புடகணனத்தால் ஸம்ஸர்ப மாதமென்றும் சொல்லப்படுகிறது. த்வாதஶ ஆதித்யர்களில் இந்த மாதத்திற்கு அதிகாரியான ஆதித்யன் இல்லாததால் கிரணங்களால் பூமிக்கு சுத்தி இல்லை. இந்த அதிகமாதமான 13- வது மாதத்தில் ஸத்கர்மாக்கள் செய்வதில் பயனில்லாததால் வ்ரதாரம்பம், உத்யாபனம், யாகங்கள் முதலியது செய்யப்படுவதில்லை. இவ்விதம் ஏழு கிரணங்கள் 96,000 மாகப் பரவி மூவுலகத்தையும் சுத்தி செய்து ஸத்கர்மாக்களுக்கு பயனைளிக்
கின்றன. த்வாதஶாதித்யர்களின் பெயரும் அவர்களின் கிரண ஸங்க்யையும்: -

| எண் | | | | கிரணங்கள் |
|---|---|---|---|---|
| 1 | சைத்ரம் | **धाता** | (தா⁴தா) | **8,000** |
| 2 | வைசாகம் | **अर्यमा** | (அர்யமா) | **10,000** |
| 3 | ஜ்யேஷ்டம் | **मित्रन्ः** | (மித்ரன்) | **7,000** |
| 4 | ஆஷாடம் | **वरुणन्ः** | (வருணன்) | **5,000** |
| 5 | ஶ்ராவணம் | **इन्द्रन्ः** | (இந்த்³ரன்ः) | **9,000** |
| 6 | பாத்ரபதம் | **सविता** | (ஸவிதா) | **10,000** |
| 7 | ஆஶ்வினம் | **पर्जन्यन्ः** | (பர்ஜன்யன்) | **9,000** |
| 8 | கார்த்திகம் | **पूषा** | (பூஷா) | **6,000** |
| 9 | மார்கஶீர்ஷம் | **देवेशन्ः** | (தே³வேஶன்ः) | **7,000** |
| 10 | பௌஷம் | **भगन्ः** | (ப⁴க³ன்ः) | **11,000** |
| 11 | மாகம் | **त्वष्टा** | (த்வஷ்டா) | **8,000** |
| 12 | பால்குனம் | **विष्णुः** | (விஷ்ணுः) | **6,000** |
| | | | ஆக | **96,000** |

முன்பு 2 - வது ஶ்லோகத்தில் மார்கஶீர்ஷத்திற்கு அம்ஶுவும், பௌஷத்திற்கு கபஸ்திமானும் சொல்லப்பட்டது, இங்கு தேவேஶன் பகன் என்று மாறிச் சொல்வ தால் ஒருவருக்கு இரு பெயர் இருக்கலாம் அல்லது வேறு கல்பங்களில் அப்பெயர் இருக்கலாமென்று தெரிகிறது.

இவ்விதம் ஸூர்ய மண்டலம், அதிஷ்டான தேவதைகள், கிரண விஶேஷங்கள், இரதம், அதன் ஸஞ்சாரம், முதலியது விஷ்ணு புராணம் முதலியதி லும், ஸ்ரீ பாகவதம் 5-வது ஸ்கந்தத்திலும் நன்கு சொல்லப்பட்டிருக்கிறது. **5**

ஐந்து ச்லோகங்களால் இரதம், மண்டலம், கிரணங்கள் இதன். விஸ்தாரம் முதலியது வர்ணிக்கப்பட்டது. இனி 4 சலோகங்களால் மண்டலத்தின் நடுவில் விளங்கும் ஸூர்ய பகவானின் மஹிமை வர்ணிக்கப்படுகின்றது. இந்த 6-வது

ஶ்லோகத்தில் ஸூர்யபகவான் வேதங்களால் ஸேவிக்கத் தகுந்தவரென்றும், ப்ரஹ்ம ஸ்வரூபமாக உபாஸிக்கத் தகுந்தவரென்றும் சொல்லப்படுகிறது.

**आदित्यं मण्डलान्तः स्फुरदरुणवपुस्तेजसा व्याप्तविश्वं**
**प्रातर्मध्याह्नसायंसमयविभजनादृग्यजुस्सामसेव्यम् ।**
**प्राप्यं च प्रापकं च प्रथितमतिपथिज्ञानिनामुत्तरस्मिन्**
**साक्षाब्रह्मेत्युपास्यं सकलभयहराभ्युद्गमं संश्रयामि ॥ ६ ॥**

**ஆதி³த்யம் மண்ட³லாந்த: ஸ்பு²ரத³ருணவபுஸ்தேஜஸா வ்யாப்தவிஶ்வம்**
**ப்ராதர்மத்⁴யாஹ்னஸாயம்ஸமயவிப⁴ஜநாத்³ருக்³யஜுஸ்ஸாமஸேவ்யம் ।**
**ப்ராப்யம் ச ப்ராபகம் ச ப்ரதி²தமதிபதி²ஜ்ஞானிநாமுத்தரஸ்மின்**
**ஸாக்ஷாத்³ப்³ரஹ்மேத்யுபாஸ்யம் ஸகலப⁴யஹராப்⁴யுத்³க³மம் ஸம்ஶ்ரயாமி ॥6॥**

ஸூர்ய மண்டலத்தின் மத்தியில் சிவந்த உருவத்துடன் காந்தியால் உலகம் முழுவதையும் ப்ரகாசப்படுத்திக்கொண்டு, காலையில் ருக்வேதத்தினுலும், மத்யாஹ்னத்தில் யஜுர்வேதத்தினுலும் ஸாயங்காலத்தில் ஸாம வேதத்தினுலும், இவ்விதம் எம்பொழுதுமே வேதகோஷங்களால் கொண்டாடப்படுகின்றவரும், ப்ரஹ்மோபாஸனத்தினுல் உத்தராயண மார்கத்தில் செல்லும் யோகிகளால் அடையத்தகுந்தவரும், அந்த மார்க்கத்தையடையும்படி செய்கின்றவரும், ப்ரஹ்மஸ்வரூபமாக உபாஸிக்கத் தகுந்தவரும், உதயத்தால் ப்ராணிகளுக்கு பயத்தைப் போக்கி அபயத்தைக் கொடுப்ப வருமான ஸூர்ய பகவானை ரக்ஷகனுக அடைகிறேன்.

உத்தராயணம் என்னும் மார்கம் ஸூர்ய கதிக்கு வடக்கேயுள்ளது. ஆகாயத்தில் செல்லும் ஸூர்ய பகவான் மூன்று மார்கமாகச் செல்லுகிறுர். தெற்கே ஒன்று, நடுவில் ஒன்று, வடக்கே ஒன்று. ஒவ்வொன்றும் மும்மூன்றுக விளங்குகிறது. அதாவது தெற்கே அஜ வீதி, ம்ருக வீதி, வைஶ்வானர வீதி என்று மூன்று. நடுவில் ஜாரத்கவ வீதி, கோ வீதி, ஆர்ஷப வீதி என்று மூன்று. வடக்கே நாக வீதி, ஐராவத வீதி.கோ வீதி என்று மூன்று. இந்த ஒன்பது வீதிகளிலும் அச்வின்யாதி 27. நக்ஷத்ரங்களில் மூன்று நக்ஷத்ரங்களுக்கு ஒரு வீதியாகச் செல்லுகிறுர். அதாவது அடியில் கண்டவாறு வட புற மிருந்து வீதிகளை அறிய வேண்டும்: -

| | | | |
|---|---|---|---|
| 1 | அச்விநீ, பரணி, கார்த்திகை. | 3 நக்ஷத்ரங்களில் | நாக வீதியில் செல்கிறுர் |
| 2 | ரோஹிணீ, ம்ருகசீர்ஷம், திருவாதிரை. | 3 நக்ஷத்ரங்களில் | கோ வீதியில் செல்கிறுர் |
| 3 | புனர்வஸு, புஷ்யம், ஆயில்யம். | 3 நக்ஷத்ரங்களில் | ஐராவத வீதியில் செல்கிறுர் |
| இந்த மூன்றுக்கும் ஐராவத மார்கம் என்று பெயர். | | | |
| 4 | மகம், பூரம், உத்திரம். | 3 நக்ஷத்ரங்களில் | ஆர்ஷப வீதியில் செல்கிறுர் |
| 5 | ஹஸ்தம், சித்திரை, ஸ்வாதி. | 3 நக்ஷத்ரங்களில் | கோ வீதியில் செல்கிறுர் |
| 6 | விசாகம், அனுஷம், கேட்டை. | 3 நக்ஷத்ரங்களில் | ஜாரத்கவ வீதியில் செல்கிறுர் |
| இந்த மூன்றுக்கும் ஜாரத்கவ வீதி என்று பெயர். | | | |
| 7 | மூலம், பூராடம், உத்திராடம். | 3 நக்ஷத்ரங்களில் | வைச்வாநர வீதியில் செல்கிறுர் |
| 8 | திருவோணம், அவிட்டம், சதயம். | 3 நக்ஷத்ரங்களில் | ம்ருக வீதியில் செல்கிறுர் |
| 9 | பூரட்டாதி, உத்தரட்டாதி, ரேவதி. | 3 நக்ஷத்ரங்களில் | அஜ வீதியில் செல்கிறுர் |

இந்த மூன்றுக்கும் வைச்வானர வீதி என்று பெயர். வைச்வானர மார்க்கத் திற்கு தென் புறத்தில் தக்ஷிணயனமார்க்க மிருக்கிறது. இதற்கு பித்ருயானம் தூமாதி மார்க்கம் என்றும் பெயர் உண்டு. ஐராவத மார்க்கத்திற்கு வடபுறத்தில் உத்தராயண மார்க்கமிருக்கிறது. இதற்கு தேவயானம், அர்ச்சிராதிமார்க்கம் என்று பெயர் உண்டு. ஸூர்யன் உத்தராயண மார்க்கத்திஞல் போகும் யோகிகளை தன் கிரணம் அவர்களின் ஹ்ருதயத்தில் வ்யாபித்து இருக்கிற படியால் கிணற்றிலிருக் கும் குடத்தை கயிற்றிஞல் இழுப்பதுபோல் சரீரத்லிருந்து இழுத்து தன் மண்டலத் தின் வழியாக ப்ரஹ்ம லோகம் போகும்படிச் செய்கிறுர். இந்த அர்ச்சிராதி மார்க்கத் தைப் பற்றி சாந்தோக்யம் முதலிய உபநிஷத்துக்களிலும், ஸ்ரீ பகவத் கீதையிலும், சொல்லப்பட்டிருக்கிறது. அர்ச்சிஸ், அஹஸ், சுக்ல பக்ஷம், உத்தராயணம், வாயு, ஸம்வத்ஸரம், தேவர்கள், ஸூர்யன், சந்திரன், வித்யுத், வருணன், இந்திரன், ப்ரஜாபதி இவ்விதம் 13 ஸ்தானங்கள் அந்த வழியில் இருக்கின்றன.

இங்கு ஸூர்யன் செல்லும் மார்க்கத்திற்கு வடக்கே உத்தராயண மார்க்க மிருந்தால் அந்த வழியில் செல்லுபவர்கள் ஸூர்ய மண்டலத்தை எப்படி அடைய முடியுமென்று சங்கை ஏற்படலாம். அதற்கு ஸமாதானம்: ஸூர்யன். இந்திரன், வருணன் முதலியவர்களுக்கு ஜ்யோதிச் சாஸ்திரப்படி லோகவ்யவஹாரத்தை நடத்துவதுடன், போக பூமியாகத் தனிப்பட்ட லோகமும் உண்டு, அங்குமிருக்கிறுர் கள். அதை அடைகிறார்கள் என்று. **6**

இந்த ச்லோகத்தில் 12 மாதங்களுக்கும் அதிகாரிகளான த்வாதசாதித்யர்கள் ப்ரதானரான ஸூர்ய பகவாஜன உபாஸிக்கிருர்கள் என்பதை விளக்குகிருர்: -

**यच्छक्याधिष्ठितानां तपनहिमजलोत्सर्जनादिर्जगत्यां**
**आदित्यानामशेषः प्रभवति नियतः स्वस्वमासाधिकारः ।**
**यत्प्राधान्यं व्यक्ति स्वयमपि भगवान् द्वादशस्तेषु भूत्वा**
**तं त्र्यैलोक्यस्य मूलं प्रणमत परमं दैवतं सप्तसप्तिम् ॥ ७ ॥**

**யச்ச2க்யாதி4ஷ்டி2தாஞம் தபனஹிமஜலோத்ஸர்ஜநாதி3ர்ஜக3த்யாம்**
**ஆதி3த்யாநாமஶேஷ: ப்ரப4வதி நியத: ஸ்வஸ்வமாஸாதி4கார: ।**
**யத்ப்ராதா4ன்யம் வ்யக்தி ஸ்வயமபி ப4க3வான் த்3வாத3ஶஸ்தேஷு பூ4த்வா**
**தம் த்ர்யைலோக்யஸ்ய மூலம் ப்ரணமத பரமம் தை3வதம் ஸப்தஸப்திம் ॥ 7 ॥**

சைத்ரம் முதலிய 12 மாதங்களுக்கு அதிகாரிகளாக த்வாதசாதித்யர்கள் இருப்பதாகக் கூறிஞேம். அவர்களின் காந்திகளால் உலகத்தில் தாபம் ஜலம் பனி முதலியது ஏற்படுகின்றது. அவர்களும் ஸூர்ய பகவானின் சக்தியிஞல் அனுக்ர ஹிக்கப்பட்ட தன் தன் மாஸாதிகாரத்தைச் செலுத்தும் திறமை வாய்ந்தவர்களாக ஆகிருர்கள். மேலும் எல்லா தேவதைகளுமே ஸூர்ய பகவானின் சக்தியிஞல் விளங்குகிருர்கள். ஸர்வேச்வரரான நாராயணனும் த்வாதசாதித்யர்களில் ஒன்ருன விஷ்ணு என்ற ரூபத்துடன் கச்யப ப்ரஜாபதிக்கு உபேந்திரன் என்ற புத்ரஞக ஆவிர்பவித்தார். இந்த ரூபத்தை

**'इदं विष्णुर्विचक्रसे', 'यतो विष्णुर्विचक्रमे',**
**'विचक्रमाणस्त्रेधोरु- गायः' 'त्रिर्देवेभ्यः पृथिवीमेष एतां',**

**'இத3ம் விஷ்ணுர்விசக்ரஸே', 'யதோ விஷ்ணுர்விசக்ரமே',**
**'விசக்ரமாணஸ்த்ரேதோ4ரு- கா3ய:' 'த்ரிர்தே3வேப்4ய: ப்ருதி2வீமேஷ ஏதாம்',**

என்ற வேத வாக்யங்கள் கொண்டாடுகின்றன. மேலும்

**'सूर्य आत्मा जगतः तस्थुषश्च'**

**'ஸூர்ய ஆத்மா ஜக3த: தஸ்து2ஷஶ்ச'**

ஸ்தாவர ஜங்கமாத்மகமான ப்ரபஞ்சமும் ஸூர்யனுடைய ஸ்வரூபமென்று வேதம் கூறுகிறது. இவ்விதமுள்ள ஸூர்யபகவானை நமஸ்காரம் செய்யுங்கள். **7**

முன் சலோகத்தில் 12 கணங்களில் ப்ரதானரான ஆதித்யன், ஸூர்ய பகவாஜன யுபாஸிப்பதாகக் கூறிஞேம். இந்த ச்லோகத்தில் மற்றுமுள்ள அப்ஸரஸ் முதலியவர்களும் உபாஸிக்கிருர்களென்று சொல்லப்படுகிறது.

**स्वस्त्रीगन्धर्वयक्षा मुनिवरभुजगा यातुधानाच नित्यं**
**नृत्तैः गीतैरमीशुग्रहनुतिवहनैरप्रतस्सेवया च ।**
**यस्य प्रीतिं वितन्वन्त्यमितपरिकरा द्वादश द्वादशैते**
**द्याभिर्वालखिल्या : सरणिकणितिभिस्तं भजे लोकबन्धुम् ॥ ८ ॥**

**ஸ்வஸ்த்ரீக3ந்த4ர்வயக்ஷா முனிவரபு4ஜகா3 யாதுதா4னாச நித்யம்**
**ந்ருத்தைஃ கீ3தைரமீஶுக்3ரஹனுதிவஹனைரப்ரதஸ்ஸேவயா ச ।**
**யஸ்ய ப்ரீதிம் விதன்வந்த்யமிதபரிகரா த்3வாத3ஶ த்3வாத3ஶைதே**
**த்3யாபி4ர்வாலகி2ல்யா : ஸரணிகணிதிபி4ஸ்தம் ப4ஜே லோகப3ந்து4ம் ॥ 8 ॥**

ஸூர்ய பகவான் இரதத்திலிருந்து மேரு பர்வதத்தைச் சுற்றி வரும்பொழுது இரதத்தைச் சுற்றிலுமுள்ள பரிவார தேவதைகள் அவரைக் கொண்டாடுவதை வர்ணிக்கிருர். அப்ஸரஸ்ஸுகள் முன்னே இருந்து நர்த்தனமாடுகிருர்கள். கந்தர்வர் கள் கானம் செய்கிருர்கள். யக்ஷர்கள் கடிவாளங்களைப் பிடிக்கிருர்கள். ரிஷிஶ்ரேஷ் டர்கள் வேத மந்த்ரங்களாலும் தாங்கள் இயற்றிய ஸ்தோத்ர பாடங்களாலும் துதிக்கிருர்கள். ஸர்ப்பங்கள் சுமக்கின்றன. ராக்ஷஸர்கள் முன் சென்று ஸேவிக்கின் ருர்கள்.

வாலகில்யர்கள் ஜய மங்கள சப்தங்களைச் சொல்லிக்கொண்டு வழியிலுள்ள இடையூர்களைப் போக்கி. ஸ்துதிபாடகர்கள் அரசன் செல்லும் பொழுது செல்லுவது போல் செல்லுகிறார்கள். இவ்விதம் ஸேவிக்கப்படுகிற உலகத்திற்கு அனுகூலனுன ஸூர்ய பகவானை ஸேவிக்கின்றேன். **8**

இந்த சலோகத்தில் ஸூர்ய பகவான் உலகத்தைப் படைப்பதற்காக ஈச்வரனுல் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ப்ரஹ்மதேவனென்று நிரூபிக்கின்ருர்: -

**ब्रह्माण्डे यस्य जन्मोदितमुषसि परब्रह्म मुख्यात्मजस्य**
**ध्येयं रूपं शिरोदोश्चरणपदजुषा व्याहृतीनां त्रयेण ।**
**तत्सत्यं ब्रह्मपश्यान्यहरहमभिधं नित्यमादित्यरूपं**
**भूतानां भूनभ स्स्वःप्रभृतिषु वसतां प्राणसूक्ष्मांशमेकम् ॥ ९ ॥**

**ப்3ரஹ்மாண்டே3 யஸ்ய ஜன்மோதி3தமுஷஸி பரப்3ரஹ்ம முக்2யாத்மஜஸ்ய**
**த்4யேயம் ரூபம் ஶிரோதோ3ஶ்சரணபத3ஜுஷா வ்யாஹ்ருதீனாம் த்ரயேண ।**
**தத்ஸத்யம் ப்3ரஹ்மபஶ்யான்யஹரஹமபி4த4ம் நித்யமாதி3த்யரூபம்**
**பூ4தானும் பூ4னபஸ்ஸ்வஃப்ரப்4ருதிஷு வஸதாம் ப்ராணஸூக்ஷ்மாம்ஶமேகம் ॥9॥**

ப்ரளய காலம் முடிந்து மறுபடி ஸ்ருஷ்டி காலாரம்பத்தில் உலகம் உண்டா கும் விதத்தை சாந்தோக்யோபநிஷத் விளக்குகிறது.

**'असदेवेदमग्र आसीत् तत्सदासीत् तत्समभवत्'**

**'அஸதே³வேத³மக்³ர ஆஸீத் தத்ஸதா³ஸீத் தத்ஸமப⁴வத்'**

இந்த உலகம் ப்ரளய காலத்தில் ஒருவராலும் அறிய முடியாததாக ஸூக்ஷ்மமாக இருந்தது. ஸ்ருஷ்டி ஆரம்ப காலத்தில் ஈஸ்வர ஸங்கல்பத்தால் ஸ்தூல நிலையை யடைவதற்காக பஞ்சீகரணத்தை யடைந்து அண்ட ரூபமாக (பறவையின் முட்டை போல்.) தோன்றியது. பிறகு ஒருவருஷ காலம் அப்படியே இருந்து இரு பாகமாக வெடித்தது. அதில் கீழ்பாகம் வெள்ளி மயமாக பூமி முதலிய கீழ் உலகங்களாக அமைந்தது. மேல் பாகம் தங்கமயமாக ஸ்வர்கம் முதலிய மேலுலகங்களாக அமைந்தது. இதுவே 14 உலகமென்கிற ப்ரஹ்மாண்ட மெனப்படும். அந்த அண்டத்தில் உள்ள ஜராயு என்ற கர்பப் பையின் பெரிய நரம்புகள் மலைகளாக அமைந்தது. சிறிய நரம்பகள் மேகங்கள் பனி இவைகளாக அமைந்தது. அதிலுள்ள தமனி என்ற குழாய்கள் நதிகளாகவும், மூத்ரஸ்தானத்திலுள்ள ஜலம் ஸமுத்ர மாகவும் அமைந்தன. பிறகு அதிலிருந்து ஸூய பகவான் உண்டானார். அப்பொழுது மங்கள சப்தங்கள் உண்டாயின. அதனால் இப்பொழுதும் ஸூர்யன் உதிக்கும் பொழுதும் அஸ்தமிக்கும் பொழுதும் ப்ராணிகள் சப்திக்கின்றன. வெடியிற் காலையில் பக்ஷிகள் கூவுகின்றன. பிறகு மனிதர்கள் எழுந்திருக்கிறார்கள். அஸ்தமய காலத்திலும் பறவைகள் கூட்டை யடையும் பொழுது சப்திக்கின்றன. இவ்விதம் ஸூர்யன் உண்டானதாகச் சொல்லுகிறது சாந்தோக்யம், ப்ருஹதாரண்யக உபநிஷ த்தில் முதலில் ஹிரண்யகர்பர் (சதுர்முக ப்ரஹ்மா) உண்டானதாகச் சொல்லு கிறது. புராணங்களிலும் இவ்விதமே சொல்லப்படுகிறது. முதலில் உண்டானவரை ஓரிடத்தில் ஸூர்ய னென்றும், மற்றோரிடத்தில் ஹ்ரண்யகர்ப்பரென்றும் சொன்னால் இருவரும் ஒன்றுதான் என்பது நன்கு விளங்குகிறது. அந்த ஹிரண்ய கர்ப்பர் விராட் ரூபத்தை ஸ்ருஷ்டித்து, அவர் முகமாக தேவதைகளையும் மற்ற ப்ராணிகளையும் ஸ்ருஷ்டித்தார்.

இந்த ஸூர்யன் மண்டலத்தில் இருப்பதுபோல் பராணிகளின் வலது கண்ணிலு மிருக்கிறார். அவருக்கு **भुवः (பு⁴வ:)** என்ற வ்யாஹ்ருதி தலையாகவும் **सुवः (ஸுவ:)** என்பது கைகளாகவும் **सुवः (ஸுவ:)** என்பது கால்களாகவும் அமைந் தது. 'அஹ: அஹம் என்ற பெயருடன் அவரை உபாஸிக்க வேண்டும். மேலும் பூமி, அந்த ரிக்ஷம், ஸ்வர்கம் என்ற மூவுலகத்திலுள்ள ப்ராணிகளின் ஸமஷ்டி ப்ராண ரூபமாகவும் இருக்கிறார். சாந்தோக்யோப நிஷத்தில்

**अक्षितमसि, अच्युतमसि, प्राणसंशितम्**

**அக்ஷிதமஸி, அச்யுதமஸி, ப்ராணஸம்ஶிதம்**

என்ற மந்திரங்களில் மூன்றுவது மந்திரத்திற்கு ப்ராணங்களுக்கு ஸூக்ஷ்ம ரூப மாக இருக்கிறரென்று அர்த்தம் தெரிகிறது.

**शो तनूकरणे** ஶோ தனூகரணே

என்ற தாதுவிலிருந்து இந்த ஶப்தம் உண்டானது.

